POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

Regd. No. TN . MS (C) 244 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 27-2-1986 வியாழன் வெளியூர் 28-2-1986 வெள்ளி [இதழ் 128

# பிரதமருக்கு புரட்சித்தலைவர் கடிதம்

## தமிழக ரெயில் திட்டங்களுக்கு கூடுதல் நிதிஒதுக்க வலியுறுத்தல்

சென்னை, பிப். 27- தமிழகத்தில் நிறைவேற்றப்பட்டு வரும் ரெயில் திட்டங்களுக்கு கூடுதல் நிதி ஒதுக்கீடு செய்யவேண்டும் என வலியுறுத்தி முதல்வர் புரட்சித்தலைவர் பிரதமர் ராஜீவுக்கு கடிதம் எழுதவுள்ளார் என அமைச்சர் ஆர்.எம்.வி. தெரிவித்துள்ளார்.

சென்னை நகரில்அமைக்கப்பட இருக்கும்துரித ரயில் திட்டத்துக்கு மேலும் அதிக நிதி ஒதுக்கும்படி முதல்வர் புரட்சித் தலைவர் பிரதமர் ராஜீவ் காந்திக்கும்,மத்திய அரசுக்கும் உடனடியாக கடிதம் எழுதுகிறார்.

இதுபற்றிய விவரத்தை அமைச்சர் ஆர்.எம்.வீ நிருபர்களிடம் தெரிவித்தார்.

அமைச்சர் ஆர்.எம்.வீ. நிருபர்களிடம் கூறியதாவது:—

ரயில்வே பட்ஜெட் நேற்று தாக்கல் செய்யப்பட்டுள்ளது. சென்னை நகரில அமைய இருக்கும் துரித ரயில் திட்டத்துக்கு போதிய நிதி ஒதுக்கப்படவில்லை.

இந்தத் திட்டம் முதலில் திருவொற்றியூரில் லிருந்து திருவான்மியூர்வரை போடுவதாக இருந்தது இதற்கு 150 கோடி ரூபாய் செலவாகுமெனமதிப்பிடப்பட்டது.

### சென்னை துரித ரயில் திட்டம்

இதில் ஒரு கட்டமாக கடற்கரை முதல் லஸ்வரை 8.45 கி. மீ. தூரத்திற்கு துரிதரயில்விட ஒப்புதல் பெறப்பட்டது இதற்கு 53.46 கோடி ரூபாய் செலவாகுமென்று மதிப்பீடப் பட்டிருக்கிறது. தினமும் 12 ரயில்கள் 310 தடவை செல்லவும், 5 நிமிடத்திற்கு ஒரு ரயில் வீதமாக இருக்கவும் திட்டமிடப்பட்டிருக்கிறது.

6 வது ஐந்தாண்டு திட்டத்திலேயே ஏற்கப்பட்ட திட்டம் இது இதற்கு83-ம் ஆண்டில் ஒரு கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டது.

84-85-ல் 3.5 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டது. 85—86-க்கு 4 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டது.

இத்திட்டத்துக்கு கடந்த ஆண்டு ரூபாய் 15 கோடி ஒதுக்க வேண்டுமென்று பிரதமரிடம் வற்புறுத்தப்பட்டது.

ஜுலையில் பிரதமர் இங்கு வந்த போதும் பிறகு ஜனவரியில் வந்தபோதும்இதை வற்புறுத்தி முதல்வர் புரட்சித்தலைவர் பிரதமரிடம் மகஜர்கொடுத்தார். 85-86க்கு 10 கோடி ரூபாயும், 86-87க்கு 10 கோடி ரூபாயும் கொடுக்க வேண்டுமென்று பிரதமரிடம் முதல்வர் கேட்டிருக்கிறார் பிறகு ஆண்டு தோறும் 20 கோடி ரூபாய் வேண்டுமென்றும் கோரி இருக்கிறார்.

ரூபாய் 53 கோடிக்கு திட்டமிடப்பட்டிருந்தாலும் திட்டம் முடிவடையும்போது 80 முதல் 90 கோடி ரூபாய் வரை செலவாகும் ஆனால் வரும் ஆண்டிற்கு 4 கோடி ரூபாய்தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

இது பெரிய ஏமாற்றம் தரும் அறிவிப்பாகும் ஆகவே மேலும் அதிக நிதியை இந்தத் திட்டத்துக்கு ஒதுக்கித் தருமாறு பிரதமர் ராஜீவ்காந்திக்கு முதல்வர் புரட்சித்தலைவர் உடனடியாக கடிதம் எழுதுகிறார்.

ரயில்வே பட்ஜெட் விவாதத்துக்கு பதிலளிக்கும் போது அதிக நிதியை ஒதுக்கி அறிவிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

இந்த திட்டத்துக்கு தமிழகஅரசு18.60 ஹெக்டேர் நிலத்தை இலவசமாக தந்துள்ளது.

### திட்டத்தை விரைவுபடுத்துக

மாநில அரசு வேறுவகையில் 15-கோடி ரூபாய் திரட்டி நியாய வட்டியில் கொடுக்க தயார் என்றும் அறிவித்திருக்கிறோம்.

திட்டத்தை எப்படியும் விரைவு படுத்த வேண்டும் என்பது அரசின் நோக்கம். அதற்காகவே இதை அறிவித்திருக்கிறோம்,

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.

# தமிழக அரசிடம் போதிய அரிசி கையிருப்பு: திருநாவுக்கரசு பேட்டி

சென்னை, பிப். 27 — அரசிடம் போதிய அரிசி கையிருப்பில் உள்ளது என்று உணவு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

ஏகபோக கொள்முதல் முறை மார்ச் மாதம் 31-ந் தேதி வரைக்கும் நீடிக்கும். வரும் மூன்று மாதத்திற்கு மாதம் ஒரு டன் அரிசி தர வேண்டுமென்று மத்திய அரசை வலியுறுத்தி உள்ளோம் என்றும் அமைச்சர் திருநாவுக்கரசு நிருபர்களிடம் கூறினார்.

அமைச்சர் திருநாவுக்கரசு நிருபர்களிடம் கூறியதாவது:-

ஏகபோக கொள்முதல் முறை இம்மாதம் 28 ந் தேதியோடு முடிவடைகிறது. இது மார்ச் 31-ந் தேதி வரை நீட்டிக்கப்படுகிறது இதையொட்டி டன் ஒன்றுக்கு ரூபாய் 35 மானியமும் விவசாயிகளுக்கு தொடர்ந்து கொடுக்கப்படும்.

குறுவை, சம்பா ஆகிய இரண்டிலும் நேற்றுவரை 5-லட்சம்டன் அரிசி கொள்முதல் செய்யப்பட்டுள்ளது.

இதுதவிர அரசிடம் போதுமான கையிருப்பு உள்ளது. மத்திய அரசு நவம்பர் டிசம்பர் மாதங்களுக்கு தலா 90 ஆயிரம் டன் அரிசி வீதம் ஒதுக்கியது.

ஜனவரி மாதத்துக்கு 65 ஆயிரம் டன் தந்தது. பிப்ரவரி, மார்ச், ஏப்ரல் ஆகிய மாதங்களுக்கு மாதம் 1 லட்சம் டன் வீதம் ஒதுக்கித் தரும்படி மத்திய அரசுக்கு கடிதம் எழுதி இருக்கிறோம். ஒரு ஆண்டுக்கு 12 லட்சம் டன் அரிசி தேவைப்படுகிறது. மேலும் 5 லட்சம் டன் அரிசி கொள் முதல் செய்ய இயலும். அரிசி தட்டுப்பாடு இல்லாமல் நிலைமையை சீராக சமாளிக்க முடியும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

### ஈழத்தமிழர் பிரச்சினை: மோகனரங்கம் வலியுறுத்தல்

புதுடெல்லி, பிப். 27- ஈழத் தமிழர்களை காக்க உடனடி நடவடிக்கை தேவை என்று மாநிலங்களவையில் கழக அணித் தலைவர் மோகனரங்கம் கூறினார்.

கழக அணித்தலைவர் மோகனரங்கம் பேசுகையில் கூறியதாவது:-

இலங்கைத் தமிழர் பிரச்சினை என்பது இந்தியப் பிரச்சினையாகும்.

ஈழத்தமிழர் படுகொலையைத் தடுத்து நிறுத்த மத்திய அரசு உடனடி நடவடிக்கை எடுக்க வேண்டும் இதில் தாமதம் காட்டக்கூடாது தாமதம்காட்டினா மேலும் தமிழர்கள் கொல்லப்படும் நிலை உண்டாகும் இல்வாறுமோகனரங்கம்கூறினார்.

# கொள்ளைகளைத் தடுக்க 24 மணிநேர போலீஸ் ரோந்து: தேவாரம்பேட்டி

சென்னை. பிப், 27— சென்னை நகரைச் சுற்றியுள்ள பகுதிகளில் கொள்ளைகள் நடைபெறாமல் தடுக்க 24 மணிநேர போலீஸ் ரோந்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதாக போலீஸ் கமிஷனர் தேவாரம் கூறினார்.

நிருபர்களிடம் பேசுகையில் கமிஷனர் தேவாரம் கூறியதாவது:-

சென்னை நகரில்போக்குவரத்திற்கு இடைஞ்சலாக நடைபாதைகளில் உள்ள ஆக்கிரமிப்புகளை அகற்றப் போவதாக மாநகராட்சி அறிவித்துள்ளது.

அவ்வாறு அகற்றும் போதுதேவைப்படும் பாதுகாப்பு ஏற்பாடுகளை போலீசார் மேற்கொள்ளுவார்கள்.

சென்னையைஒட்டியுள்ள மதுரவாயலில் நடந்த கொள்ளை பற்றி விசாரணை தொடர்ந்து நடைபெற்று வருகிறது,

இத்தகையகொள்ளைகள் நடைபெறாமல்தடுக்க தக்க நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட்டுள்ளன.

சென்னையைசுற்றியுள்ள பகுதிகளில் 24 மணி நேரமும் போலீஸ் ரோந்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இவ்வாறு கமிஷனர் தேவாரம் கூறினார்.

### பஞ்சாபில் வன்முறை: 50 பேர் பலி

புதுடெல்லி பிப். 27— பஞ்சாபில் வன்முறையாளர் கொடுமைக்கு கடந்த 5 மாதத்தில் 50 பேர் பலியாகி இருக்கிறார்கள்.

நாடாளுமன்றத்தில் கேள்விகளுக்குப் பதிலளித்து உள்துறை அமைச்சர் எஸ். பி. சவான் கூறியதாவது:-

பஞ்சாபில் சென்ற ஆண்டு அக்டோபர் முதல் பிப்ரவரி 10ந் தேதி வரை நடந்த வன்முறைகளில் 50 பேர் கொல்லப்பட்டுள்ளனர்.

வன்முறையை தடுக்க பஞ்சாப் அரசு தீவிர நடவடிக்கை எடுத்துள்ளது.

இவ்வாறு எஸ். பி. சவான் கூறினார்.

# சம்பள வெட்டுக்கு முதலாளிகள் காரணமா? ஜோதிபாசு கருத்து

கல்கத்தா, பிப். 27— தொழில்கள் சீர்கேடு அடைந்து சம்பளவெட்டு அமல் படுத்துவதற்கு முதலாளிகள் காரணமல்ல என்று மேற்குவங்க முதல்வர் ஜோதிபாசு கூறினார்.

கல்கத்தாவில் இந்திய பெயிண்ட் சங்க கருத்தரங்கை துவக்கிவைத்து மேற்கு வங்க முதல்வர் ஜோதிபாசு பேசினார்.

அப்போதுஅவர் கூறியதாவது :—

அத்தியாவசிய கச்சாப் பொருட்களின் விலையை ஒரே சீராக வைத்திருப்பதற்காக மத்திய அரசிடம் எல்லா முதல்வர்களும் சேர்ந்து பேச்சு வார்த்தை நடத்த வேண்டும்,

மேற்கு வங்கத்தைச் சேர்ந்த சில தொழிலதிபர்கள் இந்த மாநிலத்தைவிட்டு ஓட்டம் பிடித்து வேறு மாநிலங்களில் தொழில் தொடங்குகிறார்கள்.

கச்சாப் பொருட்களின் விலையை ஒரே சீராகவைத்திருக்க முடியவில்லை இதனால் பல தொழிற்சாலைகள்மோசமானநிலையில் உள்ளன.

தொழிலாளருக்கு சம்பள வெட்டு அமல்படுத்தப்படுகிறது இதற்காக தொழிலதிபர்களை குறை கூற முடியாது.

இவ்வாறு ஜோதிபாசு கூறினார்.

# பேரூராட்சித் தலைவர் தேர்தல் முடிவுகள்

| | |
|---|---|
| மொத்த இடங்கள் | 626 |
| முடிவு தெரிந்தவை | 607 |

| | |
|---|---|
| கழகக் கூட்டணி | 203 |
| தி. மு. க. | 181 |
| இந்திய கம்யூனிஸ்ட் | 13 |
| மார்க்சிஸ்ட் | 20 |
| ஜனதா | 15 |
| பாரதீய ஜனதா | 2 |
| சுயேச்சை | 17[illegible] |

# ஈழத்தமிழர்கள் மீது குண்டு வீச்சு

கொழும்பு, பிப் 27- யாழ்ப்பாணம் பகுதியில் தமிழர்கள் மீது சிங்கள ராணுவத்தினர் விமானத்தில் இருந்து குண்டு வீசித் தாக்கினர்.

வட யாழ் பாணத்தில் [illegible] கொக்குவில, [illegible] பகுதிகளில் [illegible] படையினா திடீரென விமானங்களில் இருந்து குண்டு வீசினர்.

விடுதலைப் புலிகளின் முகாம்கள் மீது தாக்குதல் நடத்தியதாக ராணுவத்தினர் கூறிக்கொண்டனர்.

ஆனால் மக்கள் வசிக்கும் பகுதிகளிலும் குண்டுகளை வீசினர்,

இந்தத் தாக்குதலில் ஏற்பட்ட உயிர்சேத விவரம் உடனடியாக தெரியவில்லை,

இந்தக் குண்டுவீச்சில் ஏராளமானவர்கள் இறந்திருக்கக்கூடும் என அஞ்சப்படுகிறது.

# ஊராட்சி ஒன்றியத் தலைவர் தேர்தல்: பெரியார் - காமராசர் மாவட்டங்களில் கழகம் அமோக வெற்றி

## போட்டியிட்ட இடங்கள் அனைத்தையும் வென்றது

சென்னை, பிப். 27— ஊராட்சி ஒன்றியத் தலைவர் தேர்தலில் கழக அணி 197 இடங்களில் வெற்றி பெற்றுள்ளது. காமராஜர் பெரியார் மாவட்டங்களில் கழகம் போட்டியிட்ட இடங்கள் அனைத்திலும் வெற்றி பெற்றுள்ளது.

தமிழகத்தில் மொத்தம் 382 பஞ்சாயத்து யூனியன்கள் உள்ளன.

இதில் இரண்டு யூனியன்களுக்குத் தேர்தல் நடைபெறவில்லை.

தேர்தல் நடைபெற்ற 380 யூனியன்களில் திருவாடானை யூனியனை தவிர மற்ற யூனியன்கள் அனைத்திற்கும் முடிவுகள் வெளியாகி விட்டன.

காமராசர் மாவட்டத்தில் கழகம் 7 இடங்களில் போட்டியிட்டது.

கழகம் போட்டியிட்ட 7 இடங்களிலும் வெற்றி பெற்றது.

காங்கிரஸ் ஒருஇடத்தைக் கைப்பற்றியது.

### பெரியார் மாவட்டம்

பெரியார் மாவட்டத்தில் கழகம் 13 இடங்களில் போட்டியிட்டது.

போட்டியிட்ட 13 இடங்களிலும் கழகம் வெற்றிவாகை சூடியது.

திருநெல்வேலி மாவட்டத்தில், கழகம் 11 இடங்களிலும் காங்கிரஸ் 8 இடங்களிலும் வெற்றி பெற்றுள்ளது.

### கோவை

கோவை மாவட்டத்தில் கழகம் 9 இடங்களிலும், காங்கிரஸ் 6 இடங்களிலும் வெற்றிபெற்றுள்ளது.

நீலகிரி மாவட்டத்தில், மொத்தம் 4 இடங்களில் 3 ஐ கழக கூட்டணியைச் சேர்ந்த காங்கிரஸ் கைப்பற்றியுள்ளது.

தென்னாற்காடு மாவட்டத்தில் 34 பஞ்சாயத்து யூனியன்கள் உள்ளன.

இதில் கழகம் 11 இடங்களிலும்இந்திராகாங்கிரஸ் 7 இடங்களிலும் வெற்றி பெற்று மொத்தம் 18 இடங்களை பிடித்துள்ளது.

சுயேச்சைகள் 29 யூனியன்களில் வெற்றி பெற்றுள்ளனர்.

# பஞ்சாயத்து யூனியன் தலைவர் தேர்தல் முடிவுகள்

மொத்த யூனியன்கள் 382

தேர்தல் நடந்தது 380

முடிவு தெரிந்தவை 379

| | |
|---|---|
| **கழகக் கூட்டணி** | |
| கழகம் | 129 |
| இ. காங்கிரஸ் | 68 |
| மொத்தம் | 197 |
| **தி. மு. க. கூட்டணி** | |
| தி. மு. க. | 137 |
| இந்திய கம்யூனிஸ்டு | 7 |
| மார்க்சிஸ்ட் | 6 |
| மொத்தம் | 150 |
| **இதர கட்சிகள்** | |
| ஜனதா | 3 |
| சுயேச்சை | 29 |

திருவாடானை பஞ்சாயத்து யூனியன் முடிவு இன்னும் வெளியாகவில்லை

## சொல்

பயனற்ற சொற்களைப் பேசுவதை நிறுத்துவோம். வீண் பேச்சிலேயே நம்மவர் காலத்தை வீணாக்குகின்றனர்.

— பேறிஞர் அண்ணா

## கவிதை

என்னதான் எதுகை மோனையுடன் கவிதைகள் செய்தாலும் அவை மனிதருக்குப் பயன் தரவில்லையெனில் வீணே!

— தந்தை பெரியார்

# உரத்துக்கு பதிலாக விவசாயிகளுக்கு ஊக்கத் தொகை

சென்னை, பிப், 27— விவசாயிகளுக்கு ஊக்கம் அளிக்க தமிழக அரசு தற்போது 35 ரூபாய் மதிப்புள்ள பூச்சிக் கொல்லி மருந்து வழங்கி வருகிறது. அதற்கு பதிலாக பணமாக வழங்க அரசு முயற்சி எடுத்து வருகிறது என்று அமைச்சர் காளிமுத்து கூறினார்.

சென்னையில் "மாநில சம்பா நெல் உற்பத்தித் திறன் கருத்தரங்கு" நடைபெற்றது.

விழாவில் தமிழக வேளாண்மைத்துறை அமைச்சர் காளிமுத்து கலந்து கொண்டு பேசினார்.

அமைச்சர் காளிமுத்து பேசுகையில் கூறியதாவது: உற்பத்தி திறனை பெருக்க நவீன உழவு கருவிகளைப் பயன்படுத்த வேண்டும்.

சம்பா பருவத்தின்போது ஒரே சமயத்தில் ஏராளமான இடங்களில் உழவுப் பணி நடப்பதால் உழவுப் பணிகளுக்கு ஆட்கள் கிடைப்பதில் ஏற்படும் சிரமத்தைச் சமாளிக்க நவீன உழவுக் கருவிகள் பயன்படும்

இந்த உழவுக் கருவிகளை விவசாயிகளுக்கு மான்ய விலையில் தருவது பற்றியும் அரசு முயற்சிகளை மேற் கொள்ளும்.

விவசாயிகளுக்கு விவசாயப் பணிகளை நல்ல முறையில் கவனிக்க போதுமான கடனுதவி தரப்படுகிறது. கடந்த ஆண்டில் கூட்டுறவுத்துறை மூலம் வழங்கிய 132 கோடி ரூபாய் உட்பட தேசிய மயமாக்கப்பட்ட வங்கி போன்ற அமைப்புகளின் மூலம்மொத்தம்500 கோடி ரூபாய் அளவுக்குவிவசாயக் கடன் தரப்பட்டது.

இந்தஆண்டு நெல்லுக்கு நீர் கிடைப்பதில் சங்கட நிலை இருந்தாலும் தமிழ்நாட்டின் அரிசி உற்பத்தி 50 லட்சம் டன்னாக இருக்கும் புதிய யுக்திகளை விவசாயிகள் கடைபிடிக்க இதுபோன்ற கருத்தரங்குகள் உதவும்.

விவசாயிகளுக்கு ஊக்கம் தருவதற்காக தமிழக அரசு தற்போது வழங்கி வரும் 35 ரூபாய் மதிப்புள்ள உரம், மற்றும் பூச்சிக் கொல்லி மருந்து ஆகியவற்றுக்குப் பதிலாக அத் தொகையை ரொக்கமாக வழங்க தமிழ் நாடு அரசு முயற்சிகளை மேற் கொண்டுள்ளது.

இந்த ஊக்க தொகையை ரொக்கமாக வழங்க ரிசர்வ் வங்கி ஒப்புதல் தரவில்லை என்றாலும் இவ்வாறு தருவதால் விவசாயிகள் மத்தியில் மேலும் உற்சாகம் ஏற்பட வழி உண்டு என்பதை ரிசர்வ் வங்கியிடம் எடுத்துக்கூறப்படும்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.

## சென்னையில் எலக்ட்ரானிக் தொலைபேசி நிலையம்

சென்னை, பிப். 27— சென்னையில் புதிய எலெக்ட்ரானிக் தொலைபேசி நிலையம் அடுத்த மாதம் அமைக்கப்பட உள்ளதாக தொலைபேசி துறை பொது மேலாளர் ரங்கநாதன் தெரிவித்துள்ளார். இந்நிலையம் பூக்கடை அருகே அமைக்கப்படுகிறது.

இதுபோன்ற நிலையங்கள் நுங்கம்பாக்கம் மந்தைவெளி, முட்டுக்காடு, அண்ணாநகர், எண்ணூர், பெருங்குடி ஆகிய இடங்களில் நிறுவப்பட உள்ளதாகவும் அவர் கூறினார்.

# கிரேக்கத்தில் தங்க கூடாது: ரஜினீஷ் சாமியாருக்கு தடை

நிகோசியா, பிப். 27— ரஜினிஷ்சாமியாருக்குமத்திய தரைக்கடல்நாடுகள் கடும் எதிர்ப்பு தெரிவித்து உள்ளன. எங்கள் நாட்டுப்பாக்கம் ரஜினீஷ் வரக்கூடாது என்று அவை கூறிவிட்டன.

சைப்ரஸ், கிரேக்கம் ஆகிய நாடுகளுக்கு ரஜினீஷ் வரக்கூடாது என்று அந்த நாடுகள் அறிவித்துள்ளன. இந்தியாவிலிருந்து நேபாளம் சென்ற ரஜினீஷ் கிரேக்கத் தீவான கிரேட்டுக்கு 'திடீர்' என்று போய் சேர்ந்துள்ளார். அங்கு அவருக்கு 200 சீடர்கள் உள்ளனர். அவர்களோடு கூடிப்பேசினார்.

இதற்கிடையில் ரஜினீஷ் அங்கு தங்கி இருந்தால் இளைஞர்களை கெடுத்து விடுவார் என்று கிறிஸ்தவ பாதிரியார்கள் கண்டித்துள்ளனர் அவரை அங்கே இருக்க விடக்கூடாது என்று பாதிரியார்கள் கூறியுள்ளனர்.

அதற்கு ரஜினீஷ் காட்டமாக பதிலளித்தார்.

'கிரேக்கதுக்காரர்கள் சொன்னாலும் நான் இங்கே இருக்கப்போவதில்லை.

இங்குள்ள பாதிரியார்கள் எல்லாம் முட்டாள்கள் (இடியட்டுகள்) மக்களை அறியாமை இருள் நோக்கி இட்டுச் செல்கிறார்கள்" என்று ரஜினீஷ் கூறியுள்ளார்.

மேற்கு ஜெர்மனியில் தங்கி இருக்க ரஜினீஷ் முடிவு செய்துள்ளார். மேற்கு ஜெர்மனியில் ரஜினீஷுக்கு சொந்தமான ஓட்டல்கள் பலநகரங்களில் உள்ளன. தியானமண்டபங்கள் பலவும் அவருக்கு சொந்தமாக உள்ளன.

## எம்.ஏ.எம். ராமசாமிக்கு விருது

சென்னை, பிப். 27 சிறந்த சமுதாய சேவை புரிந்ததற்காக தொழில் அதிபர் எம். ஏ. எம். ராமசாமிக்கு ரோட்டரி கிளப் விருது அளித்து பாராட்டியுள்ளது. பாராட்டு விழாவை டாக்டர் எஸ். சுந்தரராம் துவக்கிவைத்து எம்.ஏ.எம் ராமசாமியை பாராட்டிப் பேசினார். அண்ணாமலை நன்றி கூறினார்.

# மார்க்கோஸ் அமெரிக்காவுக்கு சென்றுள்ளார்

வாஷிங்டன், பிப். 27— பிலிப்பைன்ஸ் முன்னாள் அதிபர் மார்க்கோஸ் அமெரிக்க நாட்டிலுள்ள ஹானலூலூ பகுதிக்கு சென்றுள்ளதாக நம்பத்தகுந்த வட்டாரங்கள் தெரிவித்துள்ளன.

பிலிப்பைன்ஸ் நாட்டில் ஏற்பட்ட கலவரத்தையடுத்து அந்நாட்டு அதிபராக இருந்த மார்க்கோஸ் தனது குடும்பத்துடன் வெளிநாட்டுக்கு தப்பிச் சென்றார். மார்க்கோஸ் இப்போது அமெரிக்காவிலுள்ள ஹானலூலூவுக்கு நேற்று புறப்பட்டதாக நம்பத்தகுந்த வட்டாரங்கள் தெரிவித்துள்ளன.

ஹானலூலூவிலிருந்து மார்க்கோஸ் எங்கு செல்வார் என்பதை அந்த வட்டாரங்கள் தெரிவிக்க மறுத்துள்ளன. மார்க்கோசிற்கு அமெரிக்கா தஞ்சம் அளித்திருக்க முன் வந்திருப்பதோடு மருத்துவ வசதி உள்ளிட்ட பல வசதிகளை செய்யவும் முன் வந்துள்ளது.

இதற்கிடையில் ரீகனின் மேல் மார்க்கோஸ் அதிக நம்பிக்கை கொண்டிருக்கிறார். ரீகன் தனக்கு அரசியலில் புது வாழ்வு தருவார் என்றும் மார்க்கோஸ் நம்புவதாகத்தெரிகிறது.

அக்கினோ ஆதரவாளர்களுக்கு எதிராக தன்இறுதி மூச்சு உள்ள வரை போராடுவேன் என்றும் மார்க்கோஸ் தெரிவித்துள்ளார்.

அதிபர் மார்க்கோஸ் தன்னை அக்கினோவின் தலைமை ஆலோசகராக நியமிக்க ரீகன் உதவும்படி கேட்டுக் கொண்டுள்ளதாகவும் தெரிகிறது.

இதற்கிடையில் மார்க்கோஸ் வெளிநாட்டுக்கு தப்பிச் செல்லும் முன் தூங்காமல் இருந்ததாகவும் அக்கினோவுக்கு போதிய அனுபவம் இல்லாததால் தான் கௌரவ ஜனாதிபதியாகவோ அல்லது ஆலோசகராகவோ இருக்க விரும்பியதாகவும் ஆனால் தனது உயிருக்கு ஆபத்து ஏற்படும் என்ற நிலை ஏற்பட்டதால் தான் தப்பியதாகவும் தெரிவித்துள்ளார். இச்செய்தியை அமெரிக்க செனட்டர்லக்சால்ட் தெரிவித்துள்ளார்.

மார்க்கோஸ் நிலைமை முற்றிவிட்டதால் அமெரிக்கா அவருக்கு உதவ முடியாமல் போனது என்றும் லக்சால்ட் தெரிவித்துள்ளார்.

தான் என்ன செய்வது என்று மார்க்கோஸ் கேட்ட போது ராஜினாமா செய்வதுதான் நலம் என்றும்லக்சால்ட் கூறினாராம். இதனால் அதிருப்தி அடைந்த மார்க்கோஸ் அடுத்த சில மணி நேரங்களிலேயே தன் குடும்பத்துடன் வெளியேறினார்.

மார்க்கோசுடன் அவரது 93 வயதான தாயார் உள்ளிட்ட 6பேர் உள்ளனர் அக்கினோவின் கணவர் கொலை வழக்கில் சம்பந்தப்பட்ட ஜெனரல் பெர்ரும் உள்ளார்.

## ஜைல்சிங் வாழ்த்து

பிலிப்பைன்ஸ் புதிய அதிபர் அக்கினோவுக்கு ஜனாதிபதி ஜைல்சிங் வாழ்த்து தெரிவித்துள்ளார். பிரதமர் ராஜீவும் தொலைபேசியில் அக்கினோவுக்கு வாழ்த்து கூறினார்.

# கொலையாளிகளை கொண்டே விசாரணை நடத்துவதா?

## இலங்கை தமிழர் தலைவர்கள் கண்டனம்

சென்னை, பிப். 27— இலங்கைஅம்பாறைபகுதியில் நடந்த படுகொலைகள் பற்றி விசாரணை நடத்த அமைக்கப்பட்டுள்ள குழு வெறும் கண் துடைப்பிற்காகவே என தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணி தெரிவித்துள்ளது.

இலங்கையில் அம்பாறை மாவட்டத்தில், கடந்த 19ந் தேதி 103 தமிழர்கள் சிங்கள ராணுவத்தினரால் கொல்லப்பட்டனர்.

இதுபற்றி விசாரிக்க ராணுவத்தினரைக் கொண்ட குழு ஒன்றை இலங்கை அரசு நியமித்துள்ளது.

### தமிழர்கள் படுகொலை

இதுகுறித்து தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணி சார்பில் விடுத்துள்ள அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:

இலங்கை ராணுவத்தினரின் வெறிச் செயலால், ஏராளமான தமிழர்கள் படுகொலை செய்யப்பட்டுள்ளனர்.

வெறிச் செயலில் ஈடுபட்ட ராணுவத்தினர் பற்றி விசாரிக்க ராணுவ அதிகாரிகளைச் கொண்டே விசாரிக்கச் சொல்வது ஆச்சரியமாக உள்ளது

கொலையாளிகளைக் கொண்டே கொலைப் பற்றி விசாரிக்க சொல்வதா?

ஆகவே இக்குழுவை நாங்கள் ஏற்கவில்லை.

இவ்வாறு அந்த அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது

## விமானம் நொறுங்கியது

புதுடெல்லி, பிப். 27— இந்திய விமானப்படை விமானம் ஒன்று அசாம் பகுதியில் விழுந்துநொறுங்கியது.

விமானஓட்டிசாமர்த்தியமாக உயிர் தப்பினார் விபத்து குறித்து விசாரணைக்கு உத்தரவிடப்பட்டுள்ளது.

## பணிக் காலத்தில் இறந்த ஊழியருக்கு ரூ. 20 ஆயிரம்

சென்னை, பிப். 27— தமிழ்நாடு குடிசைப்பகுதி மாற்று வாரியத்தில். வியாசர்பாடி திட்டப்பகுதியில் துப்புரவாளராக பணி புரிந்து, பணிக்காலத்தில் மரணமடைந்த அ. துரைராஜ் குடும்பத்திற்கு, அவரது மனைவி குமுதா என்பவருக்கு குடிசை மாற்று வாரியத் தலைவர் என். வி. என். செல்வம் குடும்பநலத் தொகையான ரூ.20,000க்கானகாசோலையினை வாரிய தலைமை அலுவலகத்தில் வழங்கினார்,

## தமிழகத்து ஷாபானு

குழித்துறை, பிப். 27— விவாகரத்துபெற்ற தமிழக முஸ்லிம் பெண் கோர்ட்டில் வாதாடி ஜீவனாம்சம் பெற்றுள்ளார்.

குழித்துறை அருகே உள்ள கடையாறுமூடு கிராமத்தைச் சேர்ந்தவர் நபீசா. இவரது கணவர் பெயர் யூசுப்ராவுத்தர். இவர்களுக்கு அவுரப் என்ற நான்கு வயது குழந்தை உள்ளது,

ராவுத்தர் விவாகரத்து செய்ததை அடுத்து நபீசா ஜீவனாம்சம் கோரி குழித்துறை கோர்ட்டில் வழக்கு தொடர்ந்தார்.

இந்தவழக்கை விசாரித்த நீதிபதி கோபாலகிருஷ்ணன் நபீசாவுக்கு மாதம் ஆயிரம் ரூபாயை ராவுத்தர் ஜீவனாம்சமாக தர வேண்டுமென்று உத்தரவிட்டார்.

# ராணுவச் செலவைக் குறைக்க முடியாது: ரீகன் பிடிவாதம்

வாஷிங்டன், பிப். 27- ராணுவச் செலவைக் குறைக்கக்கூடாது என அமெரிக்க ஜனாதிபதி ரீகன் தெரிவித்துள்ளார்.

அமெரிக்க செனட் உறுப்பினர்களிடையே பேசுகையில் ரீகன் கூறியதாவது:-

சோவியத் ரஷ்யா தனது ராணுவ வலிமையை அதிகரித்துக் கொண்டே போகிறது. இந்நிலையில், அமெரிக்கா தனது ராணுவச்செலவைக் குறைப்பது அபாயகரமானது ஆகும்.

இவ்வாறு ரீகன் கூறினார்.

1987ம் ஆண்டிற்கு அமெரிக்கா 994மில்லியன் டாலர் செலவிடத் திட்டமிட்டுள்ளது.

## ஒரே குடும்பத்தை சேர்ந்த 4 பேர் தற்கொலை

பெங்களூர், பிப். 27— சேலத்தைச் சேர்ந்த ஒரு குடும்பத்தினர் பெங்களூரில் தற்கொலை செய்து கொண்டனர். சிவராஜ் (வயது30) விஜயா (வயது30 மாதேஷ் (வயது 14) ஜெயன் (வயது 8) ஆகிய 4 பேரும் சேலத்திலிருந்து பெங்களூர் சென்று ரயில் முன் பாய்ந்து தற்கொலை செய்து கொண்டார்கள். கண்டோன்மெண்ட் போலீசார் புலன் விசாரணை நடத்துகிறார்கள்

## 2 கோடியே 60 லட்சம் பேர் வேலைதேடி பதிவு

புதுடெல்லி, பிப். 27— இந்தியாவில் வேலை வாய்ப்பு அலுவலகங்களில் 2 கோடியே 60 லட்சம் பேர் வேலை தேடி பதிவு செய்துள்ளதாகமாநிலங்களவையில் தெரிவிக்கப்பட்டது.

மாநிலங்களவையில்கேள்வி ஒன்றுக்கு பதிலளித்து மத்திய அமைச்சர் சங்மா கூறியதாவது:-

இந்தியாவிலுள்ளவேலை வாய்ப்பு அலுவலகங்களில் 2கோடியே 60 லட்சம் பேர் வேலை தேடி பதிவு செய்துள்ளனர். இவர்களில் 44 லட்சம் பெண்களும் அடங்குவா.

### வெளிநாட்டுக்கு அனுப்ப...

குவெட்டரர் நாட்டுடன் இந்தியா ஆட்களை அனுப்ப ஒப்பந்தம் செய்துள்ளது. கேரளா, பஞ்சாப் போன்ற மாநிலங்களை இது குறித்து மத்திய அரசு கேட்டுக் கொண்டுள்ளது. பொதுத்துறை மூலம்இவை சரிவர நிரப்பப்படாவிட்டால் தனியார் துறையையும் இதுகுறித்து அரசு நாடும்.

பத்திரிகை தொழிலுக்கு மத்திய ஆலோசனை குழு ஒன்று அமைப்பது குறித்து அரசு பரிசீலித்து வருகிறது

இவ்வாறு சங்மா கூறினார்.

மத்திய அரசு ஊழியர்கள் அகவிலைப்படி உயர்வு குறித்த கேள்வி ஒன்றுக்கு மத்திய அமைச்சர் வி.பி. சிங் கூறுகையில் இதுபற்றி அரசு பரிசீலித்து வருவதாகவும் அரசு விரைவில் தனது முடிவை அறிவிக்கும் என்றும் கூறினார்.

# ரமேஷ் பண்டாரி இலங்கை செல்கிறார்

கொழும்பு, பிப். 27— இலங்கைத்தமிழர் பிரச்சினை குறித்து பேச்சு நடத்த இந்திய வெளிவிவகார செயலாளர் ரமேஷ்பண்டாரி இலங்கை செல்கிறார்.

இலங்கைத்தமிழர் பிரச்சினை குறித்து பேச்சு நடத்த இம்மாத ஆரம்பத்தில் பண்டாரி இலங்கை செல்ல இருந்தார். ஆனால் இலங்கை ராணுவம் தொடர்ந்து வன்முறையில் ஈடுபட்டதால் அதிருப்தி அடைந்து பண்டாரியை இலங்கைக்கு இந்தியா அனுப்பவில்லை.

பேச்சு வார்த்தை நடத்தி இப்பிரச்சினையைத் தீர்க்க இலங்கை விரும்புகிறதா? இல்லையா என்பதை இலங்கை உடனே தெரிவிக்க வேண்டும் என்று பிரதமர் ராஜீவ் இலங்கையை கடுமையாக எச்சரித்தார்.

இதைத் தொடர்ந்து இலங்கைத் தூதரை ஜெயவர்த்தனே அழைத்துப் பேச்சு நடத்தினார் அதன் பின் இலங்கைத் தூதர் டெல்லி வந்து பிரதமரை சந்தித்துப் பேசினார்.

### பேச்சு வார்த்தை

இதைத் தொடர்ந்து பண்டாரி விரைவில் கொழும்புக்குச் செல்ல இருக்கிறார். ஈழத்தமிழர் பிரச்சினை குறித்து அவர் பேச்சு நடத்துவார்,

அம்பாறை மாவட்டத்தில் அப்பாவித்தமிழர்களை இலங்கை ராணுவம் கொன்றது பற்றி விசாரணைக்கு உத்தரவிடப்பட்டிருப்பதாகவும், விசாரணைக்குழு தன் பணியை தொடங்கி விட்டது என்றும் ஜெயவர்த்தனே இந்திய அரசுக்கு தெரியப்படுத்தி உள்ளார்.

## பிலிப்பைன்ஸ் ராணுவ மந்திரியை கொல்ல சதி

மணிலா, பிப். 27 பிலிப்பைன்ஸ் ராணுவ மந்திரி ஜான், பான்ச் என்ரில் சைக்கைகொல்ல நடந்த சதி முறியடிக்கப்பட்டது. இது தொடர்பாக மார்க்கோஸ் ஆதரவாளர்கள் கைதுசெய்யப்பட்டுள்ளனர்.

பிலிப்பைன்ஸ் நாட்டு ராணுவ மந்திரியாக பதவி ஏற்றுள்ளவர் என்ரில்ஸ்.

முன்னாள் ஜனாதிபதி மார்க்கோஸ் ஆதரவாளர்கள் சிலர் என்ரில்சைக்கைகொல்லசதி திட்டம் தீட்டியதாகக் கூறப்படுகிறது.

மார்க்கோஸ் ஆதரவு மேயர் கர்னல், கிளக் ஹான்சான் என்பவரும், மற்றும் அவரது உதவியாளர்கள் எட்டு பேரும் கைது செய்யப்பட்டுள்ளனர்.

இவர்கள் வைத்திருந்த இரண்டு கார்களும் ரிவால்வர்களும் கைப்பற்றப்பட்டன.

இத்தகவலை ராணுவ மந்திரியே நிருபர்களிடம் கூறினார்.

இதற்கிடையில் மார்க்கோஸ் பதவியில் இருந்த போது சிறையில் தண்டனை விதிக்கப்பட்ட 33 அரசியல் கைதிகள் விடுதலை செய்யப்பட்டுள்ளனர்.

# சென்னை பறக்கும் ரெயில் திட்டத்திற்கு ரூ.4கோடிதான் ஒதுக்கீடு

சென்னை, பிப் 27— சென்னைபறக்கும்ரெயில் திட்டத்திற்கு 86-87ம் ஆண்டிற்கு 4 கோடி ரூபாய் மட்டுமே நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

சுமார் 20 கோடி ரூபாய் இருந்தால்தான் இந்த வேலை தொடர்ந்து நடைபெறும் என்ற நிலையில் 4 கோடி ரூபாய் மட்டுமே ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. இதுசென்னையில் ரெயில்வே வட்டாரத்தில் ஏமாற்றத்தை ஏற்படுத்தியுள்ளது.

ஏற்கனவே 7 கோடியே 90 லட்சம் ரூபாய் இத்திட்டத்திற்காக செலவிடப்பட்டுள்ளது.

பீச் நிலையத்திற்கும் சென்டிரல் ரெயில் நிலையத்திற்கும் இடையே தற்போது தண்டவாளம் போடுவதற்காக நிலம் சீரமைக்கப்பட்டுள்ளது.

இந்த பட்ஜெட்டில் 20 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டால் தான் கூவம் ஆற்றில் பாலம் கட்டும் பணியை துவக்க முடியும் எனக்கருதப்பட்டது.

இந்தப் பாலம் கட்டி முடிக்கப்பட்டால அடுத்த ஆண்டு சிந்தாதிரிப்பேட்டைவரைரெயில் போக்குவரத்தை துவக்க முடியும் எனவும் கருதப்பட்டது.

தற்போது ஒதுக்கப்பட்டுள்ள 4 கோடி ரூபாய் போதுமானது அல்ல எனக் கருதப்படுகிறது.

இதேபோல் கரூர் - திண்டுக்கல் அகல ரெயில் பாதை திட்டத்திற்கு 3 கோடியே 80 லட்ச ரூபாய் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளதும் மிகவும்குறைவானது ஆகும் என்றும் கருத்து தெரிவிக்கப்பட்டுள்ளது

## புகாருக்கு அத்தாட்சிரசிது: போலீஸ் புதிய ஏற்பாடு

சென்னை. பிப், 27— சென்னை நகரிலுள்ள எல்லா காவல் நிலையங்களிலும் புகார் கொடுக்கும் பொது மக்களுக்கு அதற்கு அத்தாட்சியாக ரசீதுகள் வழங்கப்படவுள்ளதாக கமிஷனர் தேவாரம் கூறினார்.

புகார்களை பதிவு செய்ததற்கான ரசீது தர யாரேனும் அதிகாரிகள் மறுத்தால் அது குறித்து உடனடியாக தனக்கு தெரிவித்தால் நடவடிக்கை எடுக்கப்படுமென்றும் தேவாரம் கூறினார்.

# மார்க்கோஸ் மீது பழிவாங்கும் நடவடிக்கையா? அக்கினோ மறுப்பு

மணிலா, பிப். 27— மார்க்கோஸ் மீது பழிவாங்கும் நடவடிக்கை எதையும் தனது அரசு மேற்கொள்ளாது என்று அதிபர் அக்கினோ அறிவித்துள்ளார்.

மக்கள் சக்தியை திரட்டி போராடி பிலிப்பைன்ஸ் புதிய அதிபராக பதவி ஏற்றிருக்கும் அக்கினோ அதிபராக பதவி ஏற்றபின் முதன் முறையாக நேற்று நிருபர்களுக்கு பேட்டி அளித்தார். அவர் பேசுகையில் மார்க்கோஸ்மீதுதனது அரசு பழிவாங்கும் நடவடிக்கை எதையும் மேற்கொள்ளாது என்று குறிப்பிட்டார்.

பிலிப்பைன்ஸ் நாட்டில் பீரங்கிகளை எதிர்த்து நின்று மீண்டும் ஜனநாயகம் மலரச் செய்ததற்காக தனது நன்றியினையும் அவர் தெரிவித்துள்ளார்.

# ஊதுவத்தி விற்று பிழைக்கும் தாதாசாகிப் பால்கே மகன்

பம்பாய், பிப் 27— இந்திய சினிமாவின் தந்தை என்றுவர்ணிக்கப்பட்ட தாதாசாகிப் பால்கேயின் மகன்தெருத்தெருவாக ஊதுவத்தி விற்று பிழைத்துகொண்டிருக்கிறார்

இந்திய சினிமா உலகில் மறுமலர்ச்சி ஏற்படக் காரணமாக இருந்தவர் தாதாசாகிப் பால்கே இவரது நினைவாகத்தான் ஆண்டுதோறும் மத்திய அரசு கலைஞர்களுக்கு விருது வழங்குகிறது.

சினிமா உலக சரித்திரத்தையே மாற்றி அமைத்த இந்த மேதையின் குடும்பம் இன்று சின்னாபின்னமாகி இவரது ஒரே மகன் வயிற்றுப் பிழைப்புக்காக பம்பாய் நகர வீதிகளில்ஊதுவத்திவிற்று பிழைப்பு நடத்திக் கொண்டிருக்கிறார்.

இந்திய சினிமா உலக தந்தை என்று அழைக்கப்பட்ட தாதாசாகிப் பால்கேயின் மகன் சினிமா உலகத்தினர் கண்ணில்இன்னும் படாமல் இருக்கிறார். சினிமாக்காரர்கள் உதவாவிடினும் அரசாவது அவருக்கு உதவினால் அதுவே ஒரு சகாப்த கலைஞனுக்கு செய்யும் மரியாதையாக இருக்கும்:

ஈழத் தமிழர் பிரச்சினைக்கு தீர்வு காண

# இலங்கைக்கு இந்தியா "கெடு"

## ஒரு மாதத்துக்குள் முடிவு காணவேண்டும்

புதுடெல்லி, பிப். 27- ஈழத்தமிழர் பிரச்சினைக்கு ஒரு மாதத்தில் தீர்வு காண வேண்டும் என்று இலங்கைக்கு இந்தியா 'கெடு' விதித்துள்ளது.

இலங்கைநிலவரம் குறித்து மக்கள் சபையில் கழக அணித்தலைவர் குழந்தைவேலு பேசினார்.

இலங்கைத் தமிழர்கள் சிங்களராணுவத்தினரால் படுகொலை. செய்யப்படுகிறார்கள். உடனடியாக அதைத்தடுத்து நிறுத்த வேண்டும் என்று குழந்தைவேலு கூறினார்,

எஸ். எம். பட்டம் (தெலுங்கு தேசம்), அரிஷ் ரவாத் (இ. காங்கிரஸ்), பிபாகோஸ்வாமி (மார்க்சிஸ்ட்) ஆகியோர் கவன ஈர்ப்புத் தீர்மானத்தின் மீது பேசினார்கள்.

வெளிவிவகாரஅமைச்சர் பி.ஆர்.பகத் பதிலளித்துப் பேசுகையில் இலங்கைத் தமிழர் பிரச்சினைக்கு பேச்சு வார்த்தை மூலம் தீர்வு காண ஒருமாதத்திற்குள் நடவடிக்கை எடுக்க வேண்டும்'' என்று குறிப்பிட்டார்.

மேலும் ரத்த ஆறு ஓடும் நிலை கூடாது. அப்பாவித் தமிழர்கள் கொல்லப்படக் கூடாது இதற்காக மிகக் குறுகிய காலத்தில் ஒருதீர்வு ஏற்பட்டாக வேண்டும் என்று பகத் கண்டிப்புடன் கூறினார்.

இலங்கையில் அப்பாவித் தமிழர்களை சிங்களராணுவம் படுகொலை செய்வது மனித குல நாகரிகத்தை படுகொலை செய்வதாகும். இது ஒரு இனப்படுகொலை யாகும் என்று பகத்கூறினார்.

### முதல் தடவை

இலங்கை ராணுவம் தமிழர்களைப் படுகொலை செய்கிறது இது இனப் படுகொலை என்று இந்தியா பகிரங்கமாக குற்றம் சாட்டிப் பேசுவது இதுவே முதல் தடவையாகும்.

இலங்கையிலுள்ளஇந்திய தூதர் தீட்சித் டெல்லி வந்து சேர்ந்துள்ளார்.

டெல்லியில் அவர் ஆலோசனை நடத்துகிறார். கொழும்புக்குத் திரும்பியதும் இந்தியாவின் ஆழ்ந்த கவலையை இலங்கைக்கு தெரியப்படுத்துவார்.

கடலுக்குள் மீன் பிடிக்கச் செல்லும் தமிழக மீனவர்களுக்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்குமாறு கடல் எல்லை காவல் படைக்கு இந்தியா உத்தரவிட்டுள்ளது.

## உயர் அதிகாரிகள் வீடுகளில் சி. பி. ஐ. சோதனை

புதுடெல்லி, பிப். 27— வர்த்தக அமைச்சகத்தை சேர்ந்த உயரதிகாரிகள் மூவர் வீட்டில் சி. பி. ஐ. அதிகாரிகள் நடத்திய சோதனையில் 43 லட்சரூபாய் பெறுமானமுள்ள கணக்கிலில்லாத தொகைக்கான பொருட்கள் கைப்பற்றப்பட்டுள்ளன.

ஆயிரம் ரூபாய் அடிப்படைச் சம்பளம் வாங்கும்ஒரு அரசுஊழியர் வீட்டில் 4 லட்சரூபாய் பெறுமானமுள்ளகணக்கில் வராததொகையில்வாங்கப்பட்ட பொருட்கள்கைபற்றபட்டுள்ளன.

## போலி விமான டிக்கெட் அச்சடிப்பு

சென்னை, பிப். 27— சென்னையில் போலி விமானடிக்கெட் அச்சடித்ததாக ஒரு அச்சக அதிபர் உட்பட பலர் கைது செய்யப்பட்டுள்ளனர். தியாகராய நகரில் ஒரு அச்சகத்தை மத்திய புலனாய்வுத் துறையினர் சோதனையிட்டனர். அப்போது அங்கு ஏராளமான போலி விமான டிக்கெட்டுகள் அச்சடிக்கப்பட்டு வைக்கப்பட்டிருந்தது கண்டுபிடிக்கப்பட்டது: இதுசம்பந்தமாக அந்த அச்சக அதிபரையும், அவரது கூட்டாளிகளையும் போலீசார் கைது செய்தனர். அவர்கள் கொடுத்த தகவலின் பேரில் போலீசார் கர்நாடக மாநிலத்திலும் சோதனை செய்தனர்

போலி விமான டிக்கெட் புழக்கத்தில் விட்டதால் இந்தியன் ஏர்லைன்ஸ் விமான கம்பெனிக்கு டெல்லியில் மட்டும் 85 லட்சம் ரூபாய்க்கு நஷ்டம் ஏற்பட்டுள்ளதாக விமானக் கம்பெனி தெரிவித்துள்ளது.

## மேற்கு சைதையில் கொசு ஒழிப்பு

சென்னை, பிப் 27— மேற்கு சைதாப்பேட்டை பகுதியில் மாநகராட்சியினரால கொசு ஒழிப்புப் பணி மிகத் தீவிரமாக நடைபெறுகிறது.

மேற்கு ஜோன்ஸ் சாலை காரணித் தோட்டம் முதல் தெரு, மாநகராட்சி பள்ளிக்கூடப்பகுதி, ஜெயராம் சாலை ஆகிய பகுதிகளில் இப்பணி நடைபெறுகிறது பொறியாளர் எம். செல்வராஜ் மேற்பார்வையில் கொசு ஒழிப்புப்பணி தீவிரமாக நடைபெறுகிறது.

## திருவேதி கவர்னராக பதவி ஏற்பு

காந்திநகர், பிப் 27— குஜராத்கவர்னராகஆர் கே திருவேதி பதவி ஏற்றார்.

இதுவரை கவர்னராக இருந்த பி. கே. நேரு ஓய்வு பெற்றார்.

திருவேதிக்கு குஜராத் உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதி பி. ஆர். கோகுல கிருஷ்ணன்பதவிப்பிரமாணம்செய்து வைத்தார்.

## நமது இல்லத் திருமணம்

ராயப்பேட்டை கே.ஆர். சப்பந்தத்தின் மகள் லதாவிற்கும், மகாராஷ்டிரா இந்துஸ்தான் கெமிக்கல்சில் பணிபுரியும் வெங்கடேசனுக்கும். சென்னை தியாகராயநகர் முருகன் கல்யாண மண்டபத்தில் நேற்று (26ந் தேதி) திருமணம் நடைபெற்றது



## ஜெகஜீவன்ராம் குணம் அடைந்தார்

புதுடெல்லி, பிப். 27— காங்கிரஸ் (ஜே) கட்சித் தலைவர் ஜெகஜீவன்ராம் லண்டனில் சிகிச்சை பெற்றுத் திரும்பினார்.

தற்போது அவர் குணம் அடைந்து நாடாளுமன்றக் கூட்டத்தில்கலந்துகொள்ள வந்தார். உறுப்பினர்கள் மகிழ்ச்சியுடன் கைதட்டி வரவேற்றனர்.

## தேர்தல் தோல்வியால் கல்வீச்சு - ரகளை: போலீஸ் துப்பாக்கிசூடு

திருச்சி. பிப். 27— தேர்தலுக்குப் பிறகு நடந்த சம்பவத்தில் கட்டுக்கடங்காத கூட்டம் ஒன்று வன்முறையில் ஈடுபட்டதால் போலீசார் 6 பேர் காயமடைந்தனர். துப்பாக்கிச் சூடு நடந்தது.

திருச்சி மாவட்டத்தில் தொட்டியம் என்ற இடத்தில் பஞ்சாயத்துயூனியன் தேர்தலுக்கு சுயேச்சையாக போட்டியிட்டவர் வாக்குப் பெட்டிகளில் சில முறைகேடுகள் நடந்திருப்பதாகக் கூறி ஓட்டுஎண்ணிக்கையை நிறுத்த வேண்டும் என்று அதிகாரியை கேட்டார்

சிறிது நேரத்தில் 100 பேர் கொண்ட கூட்டம் ஒன்று சாலையில் அமர்ந்து போக்கு வரத்துக்கு இடையூறு செய்தது. போலீசார் தலையிட்ட போது கூட்டத்தினர் கற்களை வீசி போலீசாரைத்தாக்கினர்.

இதில் ஒருபஸ் மற்றும் இரு லாரிகள் சேதமடைந்தன.இதனால் போலீசார் துப்பாக்கி பிரயோகம் செய்ய நேரிட்டது.

உடனே மாவட்ட ஆட்சித்தலைவர் விஸ்வநாதன், உயர் போலீஸ் அதிகாரிகள் ஆகியோர் சம்பவம் நடந்த இடத்திற்கு விரைந்து சென்றனர்.

தொட்டியம்பஞ்சாயத்து யூனியன் தலைவர் தேர்தலுக்கான ஓட்டு எண்ணிக்கை தொடங்கியது. தலைவர் பதவிக்கு துரைராஜ் (கழகம்) ஆர். ராவணன் (சுயேச்சை) திருமணி (தி. மு. க.) ஆகிய மூவரும் போட்டியிட்டனர்.

### ஆட்சேபணை நிராகரிப்பு

ஓட்டு எண்ணிக்கையின் ஆரம்பத்திலிருந்தே கழக வேட்பாளர் அதிக ஓட்டுகள் பெற்று முன்னணியில் இருந்தார்.

வாக்கு பெட்டிகள் தகுந்த போலீஸ் பாதுகாப்புடனும் சீல்கள் வைத்தும் கொண்டு வரப்படவில்லை என்று சுயேச்சை ராவணனும் அவரது ஏஜண்டுகளும் ஆட்சேபணை தெரிவித்தனர். இந்த ஆட்சேபணை ஆதாரமற்றது என்று நிரூபிக்கப்பட்டு தள்ளுபடிசெய்யப்பட்டது.

கழக வேட்பாளர் துரைராஜ் 8000 ஓட்டுகள் அதிகம் பெற்று தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டது,

தேர்தல் முடிவு அறிவிக்கப்பட்டதற்கு கண்டனம் தெரிவித்து தோல்வியடைந்த ராவணனும் அவரது ஆதரவாளர்களும் ஒரு தனியார் தீப்பெட்டி தொழிற்சாலை அருகே சாலையில் அமர்ந்து போக்குவரத்தை தடை செய்தனர். ஒன்றரை மணிநேரம் போக்குவரத்து தடைபட்டது.

கூட்டத்தினர் வன்முறையில் இறங்கி, கற்களால் தாக்க ஆரம்பித்ததும் சாலையில் பஸ் போக்குவரத்து நிறுத்தப்பட்டது.

இத்தாக்குதலில் போலீஸ் இன்ஸ்பெக்டர்லட்சுமணன் உட்பட 6 போலீசார் காயமடைந்தனர்.

வன்முறை கட்டுக்கடங்காமல் தொடர்ந்ததை அடுத்து போலீசார் தடியடி பிரயோகம் செய்தனா. அதுவும் பலன் அளிக்காமல் கல்வீச்சு மேலும் நடைபெற்றதனால் போலீசார் 8 ரவுண்டுகள் சுட்டனர்.

இதில் 3பேர் அந்த இடத்திலேயே மாண்டனர். கலவரப் பகுதியில் போலீஸ் பாதுகாப்பு அதிகரிக்கப்பட்டுள்ளது.

## இஸ்லாமிய பெண்கள் உரிமை சட்டம்: மத்திய மந்திரி ராஜினாமா

புதுடெல்லி, பிப் 27— இஸ்லாமிய பெண்கள் (விவாகரத்து உரிமை பாதுகாப்பு) மசோதாவை ஆட்சேபித்து பிரதமர்ராஜீவ்காந்திக்கு மத்திய அமைச்சர் ஆரீப் முகமதுகான் ராஜினாமாவை அனுப்பியுள்ளார்.

விவாகரத்து செய்யப்பட்ட இஸ்லாமிய பெண் ஷாபானுவுக்கு ஜீவனாம்சம் வழங்கிட சுப்ரீம்கோர்ட் அளித்த தீர்ப்பினை நாடாளுமன்றத்தில் மத்திய துணை எரிசக்தி அமைச்சர் ஆரீப் முகமது கான் பலமாக ஆதரித்தார்.

ஷாபானு வழக்கு இஸ்லாமியரில் ஒரு பிரிவினரிடையே சர்ச்சையைக் கிளப்பியது எனவே இது தொடர்பாக பிரதமர் ராஜீவ் காந்தி ஒரு மசோதாவை நாடாளுமன்றத்தில் கொண்டு வந்தார்.

அந்த மசோதா நேற்று நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது அதையொட்டி மத்திய துணை அமைச்சர் ஆரீப்முகம்மதுகான் தனது பதவியை ராஜினாமா செய்துள்ளார். ராஜினாமா கடிதத்தை பிரதமரிடம் கொடுத்துள்ளார்.

நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்ட இந்த மசோதாவை ஆதரிக்க முடியாது என்று மத்திய அமைச்சர் கான் பிரதமரிடம் கூறியதாகத் தெரிகிறது.

புதிய மசோதா சிறுபான்மை வகுப்பின் பழமை தலைவர்களிடம் சரணடைவதாகக் கருதப்படும் என்றும் கான் கருதுகிறார்.

துணிவான- கொள்கை பூர்வமான முடிவினைமேற்கொண்ட தற்காக கானை பல இந்திரா காங்கிரஸ் எம். பி. க்கள் பாராட்டினார்கள். அவர்களில் ஒருவர் மாநிலங்களவை உறுப்பினரான முன்னாள்சுப்ரீம் கோர்ட் நீதிபதி பஹ்ருல் இஸ்லாம். ராஜினாமாவை வாபஸ் பெறுமாறு கானை சில இளநிலை அமைச்சர்கள் வற்புறுத்தினார்கள் ஆனால்கான் மறுத்துவிட்டார்.

மற்ற சமயங்களைச் சேர்ந்த பெண்களுக்கு சி. ஆர். பி சி. 125 வது பிரிவின் கீழ் கிடைக்கும் ஜீவனாம்சத்தினை விவாகரத்துக்குப்பிறகு இஸ்லாமிய பெண்களுக்கு மறுக்கும் மசோதா குறித்து இந்திரா காங்கிரஸ் நாடாளுமன்ற கட்சியில் உள்ள எதிர்ப்பை கான் ராஜினாமா பகிரங்கமாக்கி விட்டது.

நேற்று சில கட்சிக்காரர்கள் கொதிப்புடன் காணப்பட்டார்கள் நாடாளுமன்றத்தில் ஆதரிக்க கோருவதற்கு முன்பு கட்சியில் முழுவிவாதம் நடத்தக் கோரினார்கள்.

சட்ட அமைச்சரை மூன்று இந்திரா காங்கிரஸ் எம். பி. க்கள் சந்தித்து மசோதாவுக்குத் தங்கள் எதிர்ப்பினை தெரிவித்தார்கள்.

## சென்னை சுற்றுலா பொருட்காட்சியில் கலப்புத் திருமணம்

சென்னை, பிப். 27— சென்னை, தீவுத்திடலில் நடைபெறும் 13வது அகில இந்திய சுற்றுலா மற்றும் தொழில் பொருட்காட்சியில்ஏழை-எளியமக்களுக்கு வசதியாக கலப்புத் திருமணம் செய்து கொள்பவர்களை ஊக்குவிக்க தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் முடிவெடுத்துள்ளது.

இதன் முதற்படியாக 26ந் தேதி காலை 7 மணி அளவில் பொருட்காட்சியில் அமைந்துள்ள மாதவி கலை அரங்கத்தில் திருச்சிராப்பள்ளியைச் சோந்த குமார் என்கிற விஜய குமாருக்கும், பொருட்காட்சியில் உள்ள ஜாலி அமூஸ்மெண்டில் பணி புரியும் குளித்தலையைச் சேர்ந்த என். எஸ். மணியின் புதல்வி செல்வி என்கிற தமிழ்ச்செல்விக்கும் தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழக நிர்வாக இயக்குநர் இரா.கிருபாகரன்தலைமையில், பொருட்காட்சி தனி அதிகாரி சோம. துரைராஜ் முன்னிலையில் மிகச் சிறப்பான முறையில் கலப்புத் திருமணம் செய்து வைக்கப்பட்டது.

திருமணத்தில் தந்தை பெரியார் வரலாற்றுக் குழு உறுப்பினர் இராஜகோபால், அவரது துணைவியார், திருமதி கிருபாகரன், கலைமாமணி சிவானந்தம் ஆகியோர் மணமக்களை வாழ்த்திப் பேசினார்கள் இத்திருமணத்திற்கு வந்திருந்த அனைவரையும் மணமக்கள் சார்பில் பாபு வரவேற்றார். இந்நிகழ்ச்சிமுடிவில் திருமணத்திற்கு வருகைபுரிந்த அனைவருக்கும் இமானுவேல் நன்றிதெரிவித்தார். பொருட்காட்சி வரலாற்றிலேயே முதன் முதலாக நடத்தப்பட்ட திருமணம் இது.

இத்திருமணத்திற்காக தமிழ்நாடு சுற்றுலாவளர்ச்சிக் கழகம் அரைப்பவுனில் தங்கத் தாலியும், மணமக்களுக்கு சுமார் ஆயிரம் ரூபாய் செலவில் பட்டு வேஷ்டியும் சட்டையும் திருமணப் புடவையும். திருமணத்திற்கு வந்திருந்த அனைவருக்கும் தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழக திறந்தவெளி உணவகத்தில் இலவசச் சாப்பாடும் அளிக்கப்பட்டது

சுற்றுலாத் துறையின் சார்பாக பொருட்காட்சியில் அமைந்துள்ள சுற்றுலாத் துறை அரங்கில அந்த தம்பதிகளுக்கு திருமண வரவேற்பு அளிக்கப்பட்டது.

வரவேற்பில் பல வெளிநாட்டு சுற்றுலா பயணிகளும்கலந்துகொண்டனர். பரத நாட்டிய நிகழ்ச்சியும் மற்றும் நடன நிகழ்ச்சியும் நடைபெற்றது.

மணமக்களுக்கு மாமல்லபுரத்தில் அமைந்துள்ள தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழக சுற்றுலாமாளிகையில் தேனிலவிற்கான ஏற்பாடும், இலவச விருந்தும் அங்கு சென்றுவர இலவச வாகன வசதியும் செய்து கொடுக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு கலப்புத் திருமணம் செய்துகொள்ள விரும்பும் ஏழை-எளிய மக்கள் இப்பொருட் காட்சி முடிவதற்குள் பொருட்காட்சி குழுவினரை அணுகலாம்.

## கட்டண உயர்வினால் 90 சதவீத பயணிகட்கு எந்த பாதிப்பும் இராது

### ரயில்வே அமைச்சர் பன்சிலால் விளக்கம்

புதுடெல்லி பிப். 27— ரெயில்கட்டண உயர்வினால் 90 சதவிகித பயணிகளுக்கு பாதிப்பில்லை என்று மத்திய ரயில்வே அமைச்சர் பன்சிலால் கூறியுள்ளார்.

வரவு-செலவுதிட்டத்தை தாக்கல் செய்து ரெயில்வே அமைச்சர் பன்சிலால் கூறியதாவது:-

ரெயில்வேவரவு-செலவுத் திட்டத்தில் ஏற்படும் சிறிய பற்றாக்குறையை ஈடுகட்ட சிறு அளவில் தான் கட்டண உயர்வு செய்யப்பட்டுள்ளது.

இதனால் 90 சதவிகித பயணிகள் பாதிக்கப்பட மாட்டார்கள்.

குறைந்ததூரம் பயணம் செய்ய விரும்புபவர்கள் வழக்கமாக பஸ் அல்லது சாதாரண ரெயில்களிலேயே பயணம் செய்ய விரும்புவார்கள்.

நீண்ட தூரம் பயணம் செய்வோர் தான் எக்ஸ்பிரஸ், மெயில் ரயில்களை விரும்புவார்கள் ஆகவே, எக்ஸ்பிரஸ்மெயில் கட்டணம் மட்டும் உயாத்தப்பட்டுள்ளது

இப்போதுள்ள நிதிப் பற்றாக்குறை நிலைமையில் கூடுதலான பயணிகள் போக்குவரத்துக்கு உரிய ஏற்பாடுகளை செய்வது சாத்தியமில்லை.

இவ்வாறு மத்தியஅமைச்சர் பன்சிலால் கூறினார்.

## ரூ. 250 கோடிக்கு கடன் எழுப்ப ரயில்வேதிட்டம்

புதுடெல்லி, பிப். 27— ரயில்வேக்களில் பல்வேறு பெறுப்புக்களை நிறைவேற்றுவதற்காகவும் அவற்றின் செலவுக்காக ரெயில்வேக்கள் ரூ. 250 கோடி கடன் திரட்டும் என்று ரெயில்வே பட்ஜெட்டை சமர்ப்பித்து லோக்சபையில் அமைச்சர் பன்சிலால் தெரிவித்தார். மேலும் அவர் கூறும் போது 7வது திட்டகாலத்தில் 96,000 வாகனகள், 6970 பயணி பெட்டிகள். 950 மின்சார ரெயில் பெட்டிகள். 1235 டீசல் மின்சார என்ஜின்கள் தயாரிக்கப்படும் என்று தெரிவித்தார்.

## எண்ணெய்சுத்திகரிப்பு ஆலையை தஞ்சையில் அமைக்க வேண்டும்

### அமைச்சர் வீராசாமி வேண்டுகோள்

தஞ்சை, பிப். 27— தஞ்சை மாவட்டத்தில் எண்ணெய் சுத்திகரிப்பு ஆலை அமைக்க வேண்டும் என்று அமைச்சர் வீராசாமி வலியுறுத்தியுள்ளார்.

தஞ்சை மாவட்டத்தில் தொழில் அபிவிருத்தி பற்றிய இரண்டு நாள் கருத்தரங்கு நடைபெற்றது

இந்த கருத்தரங்கை அமைச்சர் வீரசாமி துவக்கி வைத்தார்.

அப்போது அவர் கூறியதாவது:

தஞ்சை மாவட்டம் நரிமணத்தில் எண்ணெய் எடுக்கப்படுகிறது.

பரிசோதனை அடிப்படையில் எண்ணெய் எடுக்கும் வேலை நடைபெறுகிறது

நரிமணத்தில் இருந்து எண்ணெய் எடுப்பது வர்த்தக ரீதியில் சாத்தியமானதாக அமைந்து விட்டால் தஞ்சை மாவட்டத்தில் ஒரு எண்ணெய் சுத்திகரிப்பு ஆலையை அமைக்க மத்திய அரசு முன்வர வேண்டும்.

### துணைதொழில்கள் தொடங்குக

தஞ்சை மாவட்டத்தில் பாசன நிலங்களுக்கு போதிய தண்ணீர்வரத்து இல்லாத நிலை ஏற்பட்டு இருக்கிறது

இப்படிப்பட்ட சூழ்நிலையில் விவசாயிகள் விவசாயத்தை முழுமையாக நம்பாமல் விவசாயம் தொடர்பான தொழில்களை துவங்க முன்வர வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் வீராசாமி கூறினார்.

காவிரிப்படுகையில் எண்ணெய் வளம் ஊக்கமளிக்கும் வகையில் இருக்கிறது என்று எண்ணெய் நிலவாயுக் கமிஷன் தலைவர் கங்கூலி அந்தக் கருத்தரங்கில் கூறினார்.

கருத்தரங்கில் மாவட்ட ஆட்சித்தலைவர் டி.ஆர். ராமசாமி கலந்து கொண்டு பேசுகையில் நாகப்பட்டினத்தில் ஒரு அனல் மின் நிலையம் அமைக்க வேண்டும் என்றார்.

## சிங்கள ராணுவத்தினர் 30 பேர் கொலை

சென்னை, பிப். 27— இலங்கையில் மன்னார் மாவட்டத்தில் விடுதலைப் புலிகளுக்கும் சிங்கள ராணுவத்தினருக்கும் கடும் போர் நடந்தது. இதில் 18 சிங்கள சிப்பாய்கள் இறந்ததாக முதலில் வந்த செய்தி தெரிவித்தது இப்போது 30 சிங்கள சிப்பாய்கள் இறந்கதாகத் தகவல் கிடைத்துள்ளது 2 ராணுவ வண்டிகளையும் விடுதலைப் புலிகள் நாசப்படுத்தினர்.

## தமிழக கலைஞர்களுக்கு ஆஸ்திரேலியா அழைப்பு

புதுடெல்லி, பிப். 27— தமிழகத்தைச் சேர்ந்த கர்நாடக இசைக் கலைஞர் சேஷகோபாலன் உள்ளிட்ட பலரை இசை நிகழ்ச்சிநடத்த ஆஸ்திரேலியா அழைத்துள்ளது இந்தக் குழுவில் ஜெயராமராவ் தம்பதிகளும்செலகின்றனர்.

## தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் ரயிலில் தீ

ஆக்ரா, பிப். 27— டெல்லி-சென்னை செல்லும் தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் ரயில் ஜாரோ என்ற ரயில் நிலையத்தை கடந்து வரும் போது ஒரு பெட்டியில் திடீரென்று தீப்பிடித்தது அடுத்தபெட்டியிலும் அந்த தீ பரவியது. உடனே தீயணைப்பு படையினர் விரைந்து சென்று தீயை அணைத்தனர். இதில் இரண்டுபேர் காயமடைந்தனர். இந்த விபத்தில் 50 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள பொருட்கள் சேதமடைந்தன மின்சார கோளாறு காரணமாக இந்த விபத்து நடந்ததாகத் தெரிகிறது.

## ஓய்வு பெறும் அரசு ஊழியர் வயது வரம்பு குறைப்பு இல்லை

புதுடெல்லி, பிப். 27— மத்திய அரசு ஊழியர்கள் ஓய்வு பெறும் வயது வரம்பை 58 லிருந்து 55 ஆக குறைக்கும எண்ணம் எதுவும் அரசின் பரிசீலனையில் இல்லை என்று மத்திய அரசு தெரிவித்துள்ளது

அம்மாதிரி கருத்தினை அரசு பரிசீலித்து வருகிறது என்று வந்த வதந்திகளையடுத்து அரசு இவ்வாறு தெளிவுபடுத்தியதாக அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

## சிலைதிருடிய கும்பல் கைது

திருப்பதி, பிப். 27— தமிழ்நாடு, ஆந்திரம் ஆகிய மாநிலங்களில் உள்ள கோவில்களில் திருடுபோன பஞ்சலோக சிலைகளை காளஹஸ்தியில் போலீசார் மீட்டனர்.

இந்த திருட்டு சம்பந்தமாக 4 பேர் கொண்ட கும்பலை கைது செய்து 2 லட்ச ரூபாய் மதிப்புள்ள சிலைகளை கைப்பற்றினர் கைதானவர்கள் ஆந்திராவிலுள்ள சித்தூர், நெல்லூர். மாவட்டங்களைச் சேர்ந்தவர்களாவார்கள்.

# ஊராட்சி ஒன்றியங்களில் கழகம் பெற்ற வெற்றிகள்

சென்னை, பிப். 27— பஞ்சாயத்து யூனியன் தலைவர் தேர்தலில், இதுவரை 376 முடிவுகள் அறிவிக்கப்பட்டதில், கழக கூட்டணி 194இடங்களையும், தி.மு.க. கூட்டணி 150 இடங்களையும் கைப்பற்றி உள்ளன.

தமிழ்நாட்டில் மொத்தம் 383 பஞ்சாயத்து யூனியன்கள் உள்ளன. இவற்றில் 2 யூனியன்களுக்கு தேர்தல் நடைபெறவில்லை. மீதி 380க்கு தேர்தல் நடந்தது அவற்றில் 3 யூனியன்களில் மறுதேர்தல் நடந்ததால் ஓட்டு எண்ணிக்கை இன்றுதான் (வியாழக்கிழமை) நடைபெறுகிறது

## தேர்தல் முடிவுகள்

இதுவரை 376 யூனியன்களுக்கு முடிவுகள் அறிவிக்கப்பட்டதில், கழகக் கூட்டணி 194 இடங்களிலும், தி.மு.க. கூட்டணி 150 இடங்களிலும் வெற்றி பெற்றுள்ளது.

ஒவ்வொரு கட்சிக்கும் கிடைத்துள்ள இடங்கள் வருமாறு:—

கழகம் 127
இ.காங்கிரஸ் 67
தி.மு.க. 137
மார்க்ஸிஸ்ட் 6
இந்திய கம்யூனிஸ்ட் 7
ஜனதா 3
சுயேச்சைகள் 29

### செங்கற்பட்டு
மொத்த இடங்கள் 27
தேர்தல் நடந்தது 26
முடிவு தெரிந்தவை 26
கழகம் 7
தி.மு.க. 18
இ. காங்கிரஸ் 1

### கோவை
மொத்த இடங்கள் 20
முடிவு தெரிந்தவை 19
கழகம் 10
இ.காங்கிரஸ் 6
தி.மு.க. 2
சுயேச்சை 1

### தர்மபுரி
மொத்த இடங்கள் 18
முடிவு தெரிந்தவை 18
கழகம் 9
தி மு க 4
இ காங்கிரஸ் 2
இந்திய கம்யூனிஸ்ட் 1
சுயேச்சை 2

### குமரி
மொத்த இடங்கள் 9
முடிவு தெரிந்தவை 9
கழகம் 1
இ காங்கிரஸ் 2
தி. மு. க. 2
ஜனதா 1
மார்க்சிஸ்ட் 1
சுயேச்சை 2

### மதுரை
மொத்த இடங்கள் 21
முடிவு தெரிந்தவை 21
கழகம் 5
தி மு.க. 6
இ. காங்கிரஸ் 4
ஜனதா 1
மார்க்சிஸ்ட் 1
சுயேச்சை 4

### அண்ணா
மொத்த இடங்கள் 14
முடிவுதெரிந்தவை 14
கழகம் 4
இ காங்கிரஸ் 3
தி.மு க. 5
இந்தியகம்யூனிஸ்ட் 1
சுயேச்சை 1

### வடாற்காடு
மொத்தஇடங்கள் 38
முடிவுதெரிந்தவை 38
கழகம் 16
தி. மு. க. 15
இ. காங்கிரஸ் 4
சுயேச்சை 3

### நீலகிரி
மொத்த இடங்கள் 4
முடிவு தெரிந்தவை 4
இ. காங்கிரஸ் 3
தி. மு. க. 1

### பெரியார்
மொத்த இடங்கள் 20
முடிவு தெரிந்தவை 20
கழகம் 13
இ. காங்கிரஸ் 4
தி. மு. க. 1
இந்திய கம்யூனிஸ்ட் 1
சுயேச்சை 1

### புதுக்கோட்டை
மொத்த இடங்கள் 13
முடிவுதெரிந்தவை 13
கழகம் 4
தி.மு.க. 6
சுயேச்சை 3

### சேலம்
மொத்த இடங்கள் 34
முடிவுதெரிந்தவை 34
கழகம் 16
தி, மு. க. 6
இ. காங்கிரஸ் 7
சுயேச்சை 5

### தென் ஆற்காடு
மொத்த இடங்கள் 34
முடிவு தெரிந்தவை 34
கழகம் 11
தி.மு.க. 15
இ. காங்கிரஸ் 7
சுயேச்சை 1

### ராமநாதபுரம்
மொத்த இடங்கள் 11
முடிவு தெரிந்தவை 7
தி.மு.க. 5
இந்திய கம்யூனிஸ்டு 1
சுயேச்சை 1

### காமராசர்
மொத்த இடங்கள் 11
முடிவு தெரிந்தவை 11
கழகம் 7
இ காங்கிரஸ் 1
தி. மு .க. 3

### பசும்பொன் முத்துராமலிங்கம்
மொத்த இடங்கள் 11
முடிவு தெரிந்தவை 11
இ. காங்கிரஸ் 5
கழகம் 1
தி.மு.க. 3
சுயேச்சை 2

### நெல்லை
மொத்த இடங்கள் 31
முடிவு தெரிந்தவை 31
கழகம் 11
தி மு.க. 10
இ.காங்கிரஸ் 8
சுயேச்சை 2

### திருச்சி
மொத்தஇடங்கள் 32
முடிவு தெரிந்தவை 32
கழகம் 8
தி.மு.க. 16
இ காங்கிரஸ் 6
ஜனதா 1
மார்க்சிஸ்ட் 1

### தஞ்சை
மொத்த இடங்கள் 34
முடிவு தெரிந்தவை 34
கழகம் 4
தி. மு. க. 19
இ.காங்கிரஸ் 4
இந்திய கம்யூனிஸ்ட் 4
மார்க்சிஸ்ட் 2
சுயேச்சை 1

## செங்கை மாவட்டம்

### சித்தாமூர்
இ. கிருஷ்ணமூர்த்தி கழகம் 21719
கே. அரங்கநாதன் மார்க்சிஸ்ட் 12660
ஆர். வீராசாமி சுயே 1744
கு. கண்ணன் சுயே 1733
டி. கேசவன் சுயே 1013
எம்.சந்திரபாபு சுயே 770
செல்லாதவை 3349

### திருப்போரூர்
ம.பா. அரிகிருஷ்ண நாயக்கர் கழகம் 22140
கு.பரசுராமன்திமுக 20780
கோ.இளங்கோ சுயே 1190
வே.வீரராகவன் சுயே 365
செல்லாதவை 3509

### வாலாஜாபாத்
பெ. தேவராஜு கழகம் 27070
மா. முனுசாமி தி.மு.க. 16313
த.பாலுசாமி ஜனதா 1886
கோவிந்தன் சுயே 566
மு.கிருஷ்ணன் சுயே 136
செல்லாதவை 3044

### ஸ்ரீபெரும்புதூர்
கே. மூர்த்தி கழகம் 21100
கா. நடராசன் தி.மு.க. 15466
தர்மலிங்க முதலியார் சுயே 843
செல்லாதவை 2313

### எல்லாபுரம்
ஆர். சிட்டிபாபு கழகம் 25110
என். பங்காருசாமி தி. மு. க. 20885
கா. பழனி சுயே 869
செல்லாதவை 2936

### திருவாலங்காடு
மு. ரா. ரகுபதி இ. காங் 18608
பா. கா. ரங்கநாதன் தி. மு. க. 16009
செல்லாதவை 1999

### பள்ளிப்பட்டு
இ. எம். சாமிநாதன் கழகம் 28473
பி. எஸ். பார்த்தசாரதி தி. மு. க. 12403
செல்லாதவை 1567

## நெல்லை மாவட்டம்

### தூத்துக்குடி
இ. காங்கிரஸ் வெற்றி
ஆதிலிங்கம் (இ.காங்) 10,093
தனுஷ்கோடி (சுயே) 8, 158
தனசேகரன் (திமுக) 8010

### கோவில்பட்டி
கழகம் வெற்றி
ராஜேந்திரன் (கழகம்) 18,984
அய்யலுசாமி இந்திய கம்யூனிஸ்ட் 14,530
ஜனதா 1730

### தென்காசி
கழகம் வெற்றி
சீனிவாச பாண்டியன் கழகம் 14,579
கற்பகவிநாயகம் தி. மு. க. 14,420

### ஆழ்வார்திருநகரி
இ. காங்கிரஸ் வெற்றி
கே. டி. கே. சுபாஷ் இ. காங் 13,693
சாம்சன் டேனியல் ஜனதா 13,462
சொக்கலிங்கம் தி.மு.க, 11,476

### நாங்குனேரி
கழகம் வெற்றி:—
ராமுசுப்பு ரெட்டியார் கழகம் 18,678
தனராஜ் சாமுவேல் தி.மு.க. 16866

### புதூர்
கழகம் வெற்றி
கிருஷ்ணசாமி கழகம் 17,355
வி. ஆர். கோபாலசாமி தி.மு.க. 14,351

### அம்பாசமுத்திரம்
கழகம் வெற்றி
முருகையா பாண்டியன் கழகம் 22220
செல்லப்பா மார்க்சிஸ்ட் 19934

### ஆலங்குளம்
கழகம் வெற்றி
எஸ். கணபதி நாடார் கழகம் 21332
துரைசிங்கம்தி.மு.க. 16009

### குருவிக்குளம்
இ.காங்கிரஸ் வெற்றி:-
ஆர். மோகன்தாஸ் இ.காங் 18,078
சீதாராமன் திமுக 18,006

### கடையம்
இ.காங்கிரஸ் வெற்றி
கே. ரவி அருணன் இ.காங் [illegible]
ஆர். கசமுத்து மார்க்சிஸ்ட் 10,047

### பாப்பாக்குடி
கழகம் வெற்றி.
அமர்நாத் பிரபாகர் ராம் சேட் கழகம் 16,001
அப்பாதுரை தி.மு.க. 7,919

### கீழப்பாவூர்
இ. காங்கிரஸ் வெற்றி
எம். பத்மநாபன் இ. காங் 29,480
வெ. ஆறுமுக நாடார் தி.மு க. 24,020

### மானூர்
இ. காங்கிரஸ் வெற்றி:-
டாக்டர் சி மோகன்தாஸ் இ. காங் 20,248
ஆ. கருப்பையா தி மு.க. 13,973

### சேரன்மாதேவி
கழகம் வெற்றி:—
ப. மாடசாமி கழகம் 21,664
என். பரமசிவம் தி.மு க. 17,383
மா. கருத்தபாண்டியன் ஜனதா 1295

### வாசுதேவ நல்லூர்
இ.காங்கிரஸ் வெற்றி:-
டி.வெள்ளைச்சாமி இ காங் 27,996
எம்.பாண்டியன் மார்க்சிஸ்ட் 18,670

### சாத்தான்குளம்
கழகம் வெற்றி
வெ. ரெங்கையா கழகம் 14,054
அ. மகராஜன் தி. மு. க. 12,518

### பாளையங் கோட்டை
இ. காங்கிரஸ் வெற்றி
செ. சண்முகவேல் இ. காங் 19,747
ஜான் பாண்டியன் சுயே 16053
முத்தையாபாண்டியன் தி. மு. க. 12618

### உடன்குடி
கழகம் வெற்றி
தாமோதரன் கழகம் 12521
கண்ணபிரான் திமுக 8987
இரா. அமிர்தராஜ் சுயே 4780

## குமரிமாவட்டம்

### தோவாளை
கழகம்வெற்றி:-
தங்கம் என்ற சிதம்பர நாதபிள்ளை கழகம் 19.59 6
ராமையா தி மு.க. 12637

### ராஜாக்கமங்கலம்
இ.காங்கிரஸ் வெற்றி
செல்வசுந்தரம் இ.காங் 19,453
இரா. ஆதித்தன் தி மு.க. 15926

## மதுரை மாவட்டம்

### மேலூர்
இ. காங்கிரஸ் வெற்றி
பொன்குழியாண்டி இ. காங் 25,143
பெரி. பொசலான் தி.மு.க. 24,330

### வாடிப்பட்டி
கழகம் வெற்றி
நடராஜன் கழகம் 22,861
ராஜாங்கம் சேர்வை ஜனதா 17,816

### ராஜபாளையம்
கழகம் வெற்றி
விநாயகமூர்த்தி கழகம் 20,208
பொட்டுபேட்டான் (சுயே) 8,823
அமலன் கா.கா.தே.கா. 4,083

## வடாற்காடு

### கந்திலி ஒன்றியம்
இ. காங்கிரஸ் வெற்றி
எம். ஆர். ஜெயபாலன் இ காங் 21,212
சாமிகண்ணு இந்திய.கம்யூ 11,953
நடராஜன் ஜனதா 3,439

### வாலாஜாபேட்டை
கழகம் வெற்றி
மோகனன் கழகம் 20,266
சுப்பிரமணி திமுக 15.545

### நெமிலி
கழகம் வெற்றி
டி. பாண்டுரங்கன் கழகம் 29,127
கிருஷ்ணன் தி.மு.க. 25,962

### அரக்கோணம்
கழகம் வெற்றி
கே. ஆனந்தன் கழகம் 14,416
கிருஷ்ணன் சுயேச்சை 11,480

### ஆரணி
கழகம் வெற்றி
டி.ஆர். ஜெகதீசன் கழகம் 23,063
எம்.என். ராமன் தி.மு க 13,6 26

## தென் ஆற்காடு

### கடலூர்
கழகம் வெற்றி
அன்புதண்டபாணி கழகம் 35450
ஜெயபால் தி.மு.க. 25318

### அண்ணா கிராமம்
கழகம் வெற்றி
தாமோதரன்கழகம் 24804
நெல்லிக்குப்பம் கிருஷ்ண மூர்த்தி தி.மு.க. 22895

### குறிஞ்சிப்பாடி
இ. காங்கிரஸ் வெற்றி
நடேசன் இ. காங் 41,871
தண்டபாணி திமுக 31,726

### பரங்கிப் பேட்டை
கழகம் வெற்றி
ராஜவேலு கழகம் 28,171
தியாகராஜன் தி மு.க 18,766

### புவனகிரி
இ காங்கிரஸ் வெற்றி
பழனிச்சாமி இ.காங் 22,354
கிருஷ்ணன் திமுக 22,111

### கீரப்பாளையம்
இ.காங்கிரஸ் வெற்றி
அழகிரிஇ.காங் 25,683
கணேசன்தி மு.க, 20,275

### குமராட்சி
இ.காங்கிரஸ்வெற்றி:-
காந்தி இ.காங் 11,615
பாலகிருஷ்ணன் மார்க்சிஸ்ட் 11,249
பூராசாமி இந்திய கம்யூனிஸ்ட் 3,273

### மங்களூர்
கழகம் வெற்றி
இளங்கோவன் கழகம் 32821
சாமிதுரை தி.மு.க. 21.271

### சின்னசேலம்
கழகம் வெற்றி
மோகன் கழகம் 31,956
சுப்பராயன் தி மு. க. 24,02[illegible]

### திருக்கோவிலூர்
இ. காங்கிரஸ் வெற்றி
வடிவேல் இ. காங் 25947
ஆதிசங்கரன் தி. மு. க. 16,251

### முகையூர்
கழகம் வெற்றி
ரவி கழகம் 28,340
நடராஜன் தி.மு.க. 26,656

### திருநாவலூர்
கழகம் வெற்றி
சுந்தரமூர்த்தி கழகம் 20,493
ஜெயராமன் தி மு க. 18,830

### கோலியனூர்
கழகம் வெற்றி
சாரங்கன் கழகம் 25,460
கோவிந்தசாமி தி மு. க. 20805

### மயிலம்
கழகம் வெற்றி
தசரதன் கழகம் 28,331
தேவராஜன் தி மு.க. 13,113

### ஒலக்கூர்
கழகம் வெற்றி
கிருஷ்ணன் கழகம் 18,578
முத்துவேல் திமுக 10.984
சுப்பிரமணியம் ஜனதா 4,036

### கம்மாபுரம்
இ காங் வெற்றி
கனகராஜ் இ.காங் 25,169
ராஜவேலு திமுக 24,267

### மேல்மலையனூர்
கழகம் வெற்றி
தங்கவேல் கழகம் 27 661
பஞ்சாட்சரம் திமுக 24018

## தர்மபுரி

### தர்மபுரி
கழகம் வெற்றி:—
து. பெரியசாமி கழகம் 20,768
எஸ்.ஏ. சின்னசாமி சுயே 13,805
கே.சி. கிருஷ்ணன் மார்க்சிஸ்ட் 4.246

### கிருஷ்ணகிரி
கழகம் வெற்றி
டாக்டர் ராஜன் கழகம் 22,972
அண்ணாமலை தி மு க. 10,596

### நல்லம்பிள்ளை
கழகம் வெற்றி:-
ஜி அரங்கநாதன் கழகம் 22.077
எம் சுப்பிரமணியன் சுயே 18,864
இல த.பச்சியப்பன் தி.மு க. 1092

### பாலக்கோடு
கழகம் வெற்றி:-
நாகராஜன் கழகம் 31,629
சாம்ராஜ் தி. மு. க. 19,896

### அரூர்
கழகம் வெற்றி:-
வெள்ளை முருகன் கழகம் 22,628
ரங்கராஜ் சுயே 18,838
அண்ணாமலை மார்க்சிஸ்ட் 14,133

### மாத்தூர்
கழகம் வெற்றி:-
ஜெகநாதன் கழகம்22,013
வேடியப்பன் தி.மு.க.11,988

### சூளகிரி
இ.காங்கிரஸ்வெற்றி
முனிசந்திரப்பா இ. காங் 27,104
முனுசாமிரெட்டி தி மு. க. 12918

### கெலமங்கலம்
கழகம் வெற்றி:-
சுப்பிரமணியம் கழகம் 20387
பாலு தி மு க. 11708

### தளி
இ. காங்கிரஸ் வெற்றி:-
அனுமந்தரெட்டி இ. காங் 31,450
ராமரெட்டி சுயே 24:061

### காவேரிப் பட்டினம்
கழகம் வெற்றி
பெரியவேடி கழகம் 39,610
பூங்காவனம் தி.மு.க. 18,932

### பர்கூர்
கழகம் வெற்றி:-
உதயகுமார் கழகம் 45911
முருகன் தி.மு.க. 12913

---

# துப்பாக்கியால் சுட்டு மிரட்டிய ஆசாமி கைது

மதுரை.பிப்.27-சாத்தூர் அருகே உள்ள பெரிய பிள்ளைப்பட்டி பஞ்சாயத்து தலைவர் தேர்தலுக்குதிருப்பதிஎன்பவரும், தன்னாசி என்பவரும் போட்டியிட்டனர். திருப்பதிக்காகஅவரது நண்பர் ஜெயராமன் பணியாற்றினார்.

தேர்தலில் தன்னாசி வெற்றி பெற்றார்.

இதையடுத்து ஜெயராமன் தெருவில் நின்று கொண்டு ரிவால்வரால் வானில் சுட்டாராம். இதையடுத்து மக்கள் அலறி அடித்து ஓடினர்.

பிறகு போலீசார் ஜெயராமனைக் கைது செய்து விசாரணை நடத்தினர்.

---








Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS 600 029.